31465

OL/2016/16-T-I, II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## இஸ்லாம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** நபி முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு முதலாவது 'வஹி' இறங்கிய இடம்
(1) ஸபா (2) மர்வா (3) ஹிறா (4) ஸவ்ர்

**2.** ஒரு மு.'.மின் நிறைவேற்ற வேண்டிய பணிகளுள் 'இமாரத்' குறிப்பது
(1) அல்லாஹ்வின் பிரதிநிதியாகத் தொழிற்படுவதனை (2) பூமியை வளப்படுத்துவதனை
(3) அல்லாஹ்வை வழிபடுவதனை (4) இறை சட்டங்களை அமுல்நடத்துவதனை

**3.** 'துஆஉல் இஸ்திப்தாஹ்' ஓதப்படும் சந்தர்ப்பம்
(1) அத்தஹிய்யாத்தின் பின் (2) ருகூஉவிலிருந்து எழுந்ததும்
(3) ஸுஜூத்தின் பின் நடு இருப்பில் (4) தக்பீர் தஹ்ரீமுக்குப் பின்

**4.** 'இல்ஹாத்' என்ற அறபுப் பதம் எதனைச் சுட்டும் ?
(1) நாத்திகம் (2) நயவஞ்சகம் (3) விசுவாசம் (4) நிராகரிப்பு

**5.** பின்வருவனவற்றுள் நெருக்கமான ஒத்தகருத்தைக் கொண்ட சோடி எது ?
(1) கல்புன் ஸலீம் - கல்புல் முத்மஇன்னா (2) ஸஹீஹ் - ழஈப்
(3) முஜ்தஹித் - முகல்லித் (4) துன்யா - ஆகிறா

**6.** பின்வருவோரில் 'அஜ்னபி' ஆனவர் யார் ?
(1) மனைவியின் தாய் (2) செவிலித் தாய் (3) மகனின் மனைவி (4) மாமியின் மகள்

**7.** சட்டத்துறை சார்ந்த விடயங்களைச் சுட்டும் கலை
(1) இல்முல் பராஇழ் (2) இல்முல் அகீதா (3) இல்முல் பிக்ஹ் (4) இல்முன் நப்ஸ்

**8.** தடைசெய்யப்பட்ட வர்த்தக நடவடிக்கை
(1) அல்-முழாரபா (2) அல்-முஷாரகா (3) அல்-இஜாரா (4) அர்-ரிபா

**9.** ஸாலிம், பணத்தால் செய்யப்படும் சுன்னத்தான 'அமல்' ஒன்றை நிறைவேற்ற முயற்சித்தபோது, அவனது அயல் கிராம மக்கள் வெள்ளத்தில் சிக்குண்டு பிறரின் ஒத்துழைப்பை எதிர்பார்க்கும் நிலைக்குத் தள்ளப்பட்டிருந்தனர். இந்நிலையில் ஸாலிமை வழிநடத்தப் பொருத்தமான கூற்றாக அமைவது பின்வருவனவற்றுள் எது ?
(1) கவலைப்படாதே, அனர்த்தங்கள் இயற்கையானவை; நீ உனது விருப்பத்தை நிறைவேற்று.
(2) நீ உனது பணத்தைக் கொடுக்க வேண்டியதில்லை; அரச சார்பற்ற நிறுவனங்கள் ஓடி வந்துவிடும்;அல்லாஹ்வுடைய பாதையில் சென்று வா.
(3) நீ மேற்கொள்ளப் போவது ஒரு சுன்னத்தான விடயம். எமது உடன்பிறப்புகள் கஷ்டத்தில் இருக்கின்றனர்; உனது பணத்தைக் கொண்டு அம்மக்களுக்கு உதவி செய்.
(4) உண்மைதான், இது ஒரு சிக்கலான விடயம். உனது மைத்துனன் நிரந்தரத் தொழிலின்றி அவதிப்படுகிறான். அப்பணத்தை அவனுக்கு வழங்கிவிடு; அந்தக் குடும்பத்தைக் கவனித்தது போல் ஆகிவிடும்.

[பக். 2 ஐப் பார்க்க

10. "இவ்வுலக வாழ்வு வேடிக்கையும் வீண் விளையாட்டுமாகும். நிச்சயமாக மறுமை வாழ்வே நிலையானது" என்ற கூற்று
(1) அல்-குர்ஆனுடையது. (2) அல்-ஹதீஸுடையது.
(3) ஸஹாபாக்களுடையது. (4) இமாம்களுடையது.

11. கீழே 'அ' பிரிவில் ஹஜ் தொடர்பான செயற்பாடுகளும் 'ஆ' பிரிவில் தரங்களும் தரப்பட்டுள்ளன.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) ஆண்கள் தலையை மறைப்பது | A - வாஜிபு |
| (ii) புத்தி சுயாதீனமாய் இருப்பது | B - பர்ளு |
| (iii) 'தவாபுல் விதாவை' நிறைவேற்றுவது | C - முஹர்ரமாத் |
| (iv) துல்ஹஜ் 9 இல் அறபாவில் தரிப்பது | D - ஷர்த்து |

'ஆ' நிரலை 'அ' நிரலுடன் இணைக்கும்போது கிடைக்கப்பெறும் சரியான விடை
(1) A, C, B, D (2) B, A, D, C (3) C, D, A, B (4) D, B, C, A

12. 'இக்லாஸ்' என்ற சொல்லின் மூலம் உணர்த்தப்படுவது
(1) பேணுதல் (2) பற்றற்ற வாழ்வு (3) உளத்தூய்மை (4) இறையச்சம்

13. முதலில் அருளப்பட்ட அல்-குர்ஆன் வசனங்கள் உள்ளடக்கப்பட்டுள்ள ஸூரா
(1) அல்-அலக் (2) அல்-கஹ்பு (3) அல்-பலத் (4) அல்-பகரா

14. 'பித்ரா' நிறைவேற்றப்பட வேண்டிய நாள்
(1) ஷவ்வால் 1 (2) துல்ஹஜ் 10 (3) ரஜபு 27 (4) ரமழான் 27

15. நான் யார் ?, எங்கிருந்து வந்தேன் ? போன்ற வினாக்களுக்குச் சரியான விடையைத் தருவது
(1) புலனறிவு (2) பகுத்தறிவு
(3) வஹி அறிவு (4) விஞ்ஞான அறிவு

16. வர்த்தகர் ஒருவர் வர்த்தகத்தை ஆரம்பித்து ஒரு வருட கால இறுதியில் சுமார் ரூ. 850 000/- இருப்பில் இருப்பதைக் கண்டார். அவ்வருட நிஸாப்பின் அளவு ரூ. 450 000/- ஆக இருந்தது. அவர் செலுத்த வேண்டிய சகாத்தின் அளவு யாது ?
(1) ரூ. 10 000/- (2) ரூ. 11 250/- (3) ரூ. 21 250/- (4) ரூ. 42 500/-

17. கிலாபதுர் ராஷிதாவைத் தொடர்ந்து இஸ்லாமிய ஆட்சியைப் பொறுப்பேற்றவர்கள்
(1) உமையாக்கள் (2) அப்பாஸியர் (3) உஸ்மானியர் (4) பாத்திமீக்கள்

18. கர்ப்பிணித் தாயொருவரின் இத்தாக் காலம் எவ்வளவு ?
(1) பிரசவம் நிகழும் வரை (2) 4 மாதங்கள் 10 நாட்கள்
(3) 3 மாதங்கள் (4) இத்தா கிடையாது

19. 'ஹனீப்கள்' எனப்பட்டவர்கள்
(1) ஜாஹிலிய்யாக் காலத்தில் வாழ்ந்த இணை வைப்பில் ஈடுபடாதவர்கள்
(2) சுவனம் நன்மாராயம் கூறப்பட்டவர்கள்
(3) ஹிஜ்ரத்தில் கலந்து கொண்டவர்கள்
(4) மஜ்லிஸுஷ் ஷூரா அங்கத்தவர்கள்

20. நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றை முதன் முதலில் எழுதியவர்
(1) இபுனு இஸ்ஹாக் (2) இபுனு ஹிஷாம்
(3) இபுனு கல்தூன் (4) இபுனு கல்லிகான்

21. ஒன்றுக்கு மேற்பட்ட பங்குதாரர்களின் இணைப்பைக் கொண்ட கூட்டு வியாபாரம் எவ்வாறு அழைக்கப்படும் ?
(1) முழாரபா (2) முஷாரகா (3) முதாரஆ (4) முராபஹா

22. அகீதாவைப் பகுத்தறிவுக் கண்ணோட்டத்தில் ஆராய்ந்த குழுவினர்
(1) அல்-முஃதஸிலா (2) அல்-முர்ஜிஆ (3) அஷ்-ஷீஆ (4) அல்-ஜபரிய்யா

23. மனிதன், ஏனைய மனிதர்களுக்குச் செய்ய வேண்டியவை
(1) ஹக்குல்லாஹ் (2) ஹக்குன் நப்ஸ் (3) ஹக்குல் இபாத் (4) ஹக்குல் ஜார்

24. பின்வருவனவற்றுள் 'மறுமை நாளைச்' **சுட்டாதது**
(1) யவ்முல் ஆகிறா (2) யவ்முன் நஹ்ர் (3) யவ்முல் கியாமா (4) யவ்முத் தீன்

25. அஹமத் தனது தந்தைக்கு, பாத்திரமொன்றில் தண்ணீர் கொண்டு சென்றான். திடீரென்று தேநீர் கோப்பையுடன் அங்கு வந்த அவனது சகோதரி நஸீமாவுடன் மோதவே அவர் கொண்டுவந்த தேநீர் அஹமதின் தண்ணீர்ப் பாத்திரத்தில் கொட்டியது. இந்த நீர் எவ்வாறு அழைக்கப்படும் ?
(1) 'அல்-மாஉத் தாஹிர்' என்றாகும். (2) 'அல்-மாஉத் தஹூர்' என்றாகும்.
(3) 'அல்-மாஉல் முஸ்தஃமல்' என்றாகும். (4) 'அல்-மாஉன் நஜிஸ்' என்றாகும்.

[பக். 3 ஐப் பார்க்க

26. அல்-குர்ஆனில் 'தர்தீபுன் நுஸூல்' என்பது
(1) அல்-குர்ஆன் தற்போது தொகுக்கப்பட்டுள்ள ஒழுங்கு
(2) அல்-குர்ஆன் நபியவர்களுக்கு அருளப்பட்ட ஒழுங்கு
(3) அல்-குர்ஆன் குறிப்பிடுகின்ற சட்டவிதிகள்
(4) அல்-குர்ஆனை விளங்கிக்கொள்வதற்கான வழிமுறை

27. 'தஸ்கியா' எனப்படுவது
(1) பேணுதல் (2) பற்றற்ற வாழ்வு (3) சுத்தம் செய்தல் (4) தூய எண்ணம்

28. பின்வருவனவற்றுள் நபி முஹம்மத் (ஸல்) அவர்களைச் சுட்டும் தொடர்
(1) ரப்புன்னாஸ் (2) ஹுதன் லின்னாஸ் (3) ரப்புல் ஆலமீன் (4) ரஹ்மதன் லில் ஆலமீன்

29. "குல்-ஹுவல்லாஹு அஹத்..." என்ற வசனங்களுடன் அமைந்துள்ள ஸூராவின் பெயர்
(1) ஸூரதுல் கஃப்ர் (2) ஸூரது யூஸுப் (3) ஸூரதுல் இக்லாஸ் (4) ஸூரதுன்னாஸ்

30. 'மஹர்' எனப்படுவது
(1) பெண் தரப்பு ஆண் தரப்புக்கு வழங்கும் நன்கொடை
(2) ஆண் தரப்பு பெண் தரப்புக்கு வழங்கும் நன்கொடை
(3) அடமானமாக வைக்கப்படும் பொருட்கள்
(4) புதுமணத் தம்பதியினருக்கு வழங்கப்படும் பரிசுப் பொருட்கள்

31. நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் இளம்பராயத்தில் 'அல்-அமீன்' என அழைக்கப்பட்டமைக்கான காரணம்
(1) உண்மை உரைத்தமை (2) சமூகப்பணி செய்தமை
(3) அநாதையாக வளர்ந்தமை (4) நம்பிக்கையாக நடந்து கொண்டமை

32. கீழே **'அ'** நிரலில் நூலாசிரியர்கள் சிலரின் பெயர்களும் **'ஆ'** நிரலில் அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் சிலவற்றின் பெயர்களும் தரப்பட்டுள்ளன.

| **'அ'** | **'ஆ'** |
|---|---|
| (i) இமாம் மாலிக் (ரஹ்) | A - அர்-ரிஸாலா |
| (ii) இமாம் அஹ்மத் (ரஹ்) | B - முஅத்தா |
| (iii) இமாம் ஷாபிஈ (ரஹ்) | C - அல்-பிக்ஹுல் அக்பர் |
| (iv) இமாம் அபூஹனீபா (ரஹ்) | D - முஸ்னத் அஹ்மத் |

மேலே **'ஆ'** நிரலிலுள்ள நூல்களின் பெயர்கள் **'அ'** நிரலிலுள்ள நூலாசிரியர்களின் பெயர்களுடன் ஒழுங்குமுறையில் தொடர்புபடுத்தப்பட்டுள்ள விடை யாது ?
(1) A, B, D, C (2) B, C, D, A (3) B, D, A, C (4) D, B, C, A

33. தயம்மும் உறுப்புகள் யாவை ?
(1) முகமும் இரு கால்களும் (2) முகமும் இரு கைகளும்
(3) முகமும் தலையும் (4) முகம், தலை, இரு கைகள் ஆகியன

34. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் அறபு நாட்டின் கிழக்கு எல்லை
(1) சிரியா பாலைவனம் (2) அறபுக்கடல் (3) பாரசீக வளைகுடா (4) செங்கடல்

35. திருமணம் தவிர்ந்த ஈஜாப், கபூல் இடம்பெறுகின்ற பிறிதொரு சந்தர்ப்பம்
(1) அரச ஊழியம் (2) கொடுக்கல் வாங்கல் (3) மக்கள் சேவை (4) குடிசைக் கைத்தொழில்

36. அஜ்னபியான ஓர் ஆணுடன் பெண்ணொருவர் தனித்திருப்பது
(1) மக்றூஹ் (2) ஜாஇஸ் (3) ஹறாம் (4) முஸ்தஹப்

37. இஸ்லாத்தில் முக்கியத்துவம் பெற்றுள்ள மூன்று வணக்கஸ்தலங்களுள் **உள்ளடங்காதது**
(1) கஃபதுல்லாஹ் (2) மஸ்ஜிதுல் அக்ஸா (3) மஸ்ஜிதுன்னபவி (4) மஸ்ஜித் கிப்லதைன்

38. எகிப்திலிருந்து இலங்கைக்கு நாடுகடத்தப்பட்டவர்
(1) உமர் ஹஸரத் (2) காலித் பின் பகாயா (3) ஒறாபி பாஷா (4) இபுனு பதூதா

39. கொழும்பு ஸாஹிராக் கல்லூரியில் அதிபராகவும் அரசியல் பிரமுகராகவும் இருந்து நாட்டுக்குப் பணியாற்றியவர்
(1) சித்தி லெவ்வை (2) ஐ. எல். எம். ஏ. அஸீஸ்
(3) கலாநிதி T. B. ஜாயா (4) டபிள்யூ. எம். அப்துர் ரஹ்மான்

40. 'கழா-கத்ர்' மீது **அவநம்பிக்கை** கொள்பவனின் நிலை
(1) பாஸிக் (2) முர்தத் (3) முனாபிக் (4) காபிர்

* *

[பக். 4 ஐப் பார்க்க

(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

## இஸ்லாம் II

※ **முதலாம்** வினா உட்பட **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை தருக.

(i) வஹியின் பிரிவுகள் **இரண்டையும்** பெயரிடுக.

(ii) தொழுகை மூலம் முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற முடிந்த பாவங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iii) இஸ்லாம் அனுமதித்துள்ள வர்த்தக முயற்சிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iv) அலி (ரலி) அவர்களிடம் காணப்பட்ட ஆளுமைப் பண்புகள் **இரண்டை** எழுதுக.

(v) தொழுகையில் 'ஓதுதல்' மூலம் நிறைவேற்றப்படும் பர்ளுகள் **இரண்டையும்** பெயரிடுக.

(vi) கலீபாக்களான அபூபக்ர் (ரலி), உஸ்மான் (ரலி) ஆகியோர் அல்-குர்ஆன் தொகுப்பில் ஈடுபடத் தூண்டுதலாக இருந்த **இரண்டு** ஸஹாபிகளும் யாவர் ?

(vii) ஜாஹிலிய்யாக் கால மக்கள் பேணிவந்த நற்பண்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(viii) ஈஜாப், கபூல் எனும் பதங்கள் சுட்டும் கருத்துக்கள் யாவை ?

(ix) இஜ்மா.்வின் பிரதான வகைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(x) பொருளீட்டலின்போது கவனத்திற் கொள்ள வேண்டிய ஷரீஅத் வழிமுறைகள் **நான்கைக்** குறிப்பிடுக.

**2.** (i) அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத் என்ற தொடரின் மூலம் விளக்கப்படுவது யாது ?

(ii) இல்முல் அகீதாவின் தோற்றத்துக்கான பின்னணியைக் குறிப்பிடுக.

(iii) வழிபிறழ்ந்த அகீதா பிரிவுகள் பற்றி விவரிக்குக.

**3.** (i) நபியவர்களின் மக்கா கால த.்வாவில் அவருக்குத் துணையாக இருந்தோர் யாவர் ?

(ii) நபியவர்களின் த.்வாவைத் தடுக்க, குறைஷியர் கையாண்ட வழிமுறைகளைத் தெளிவுபடுத்துக.

(iii) இரண்டாவது அகபா உடன்படிக்கை பற்றி விவரிக்குக.

**4.** (i) 'பிக்ஹுல் அவ்லவிய்யாத்' உணர்த்தும் கருத்து யாது ?

(ii) இஸ்லாம் வழங்கியுள்ள மனித உரிமைகள் கொண்டுள்ள தனித்துவப் பண்புகளை எடுத்துக்காட்டுக.

(iii) நாளாந்த வாழ்வில் ஏற்படக்கூடிய இக்கட்டான நிலையொன்றைக் குறிப்பிட்டு, அதன்போது முன்னிலைப்படுத்தப்பட வேண்டிய விடயம் பற்றி விளக்குக.

**5.** (i) "துஆ ஒரு வணக்கம்" என்பதன் மூலம் கருதப்படுவதென்ன ?

(ii) ஸுபஹுத் தொழுகையின் பின் ஓத வேண்டுமென்று நபியவர்கள் கற்றுத் தந்த **மூன்று** துஆக்களையும் குறிப்பிடுக.

(iii) தஸ்பீஹ், தஹ்மீத், தக்பீர எனும் பதங்களைத் தெளிவுபடுத்துக.

**6.** (i) 'உம்மத்' என்பதன் கருத்தை எழுதுக.

(ii) குடும்ப உறவின் மூலம் உருவாகும் மஹ்ரமீக்களைப் பற்றி விளக்குக.

(iii) அஜ்னபீக்களுடனான கலந்துரையாடலின்போது பேண வேண்டிய ஒழுங்குமுறைகளை விவரிக்குக.

**7.** பின்வருவனவற்றுள் **இரண்டுக்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(i) நீரின் வகைகளும் அவற்றின் பயன்பாடும்

(ii) இலங்கையில் முஸ்லிம்களின் தேசிய பங்களிப்பு

(iii) ஈகையின் பயன்பாடுகள்

(iv) நடுநிலை பேணல் (வஸதிய்யா)

* * *